பிரதிவாதித்தல். இங்ஙனமாய இவ்விருதிறத்ததுஞ் சத்தமாயினும் அச் சத்தத்தால் சத்துக்கள் தமது அபிப்பிராயங்களைப் பிறர்க்கு விளக்க அதனை வாக்கியப் பிரயோகமாகவும், செய்யுட் பிரயோகமாகவும் வகுத்தனர். இந்நிலையதாய சத்தப்பிரமாண மென்றால் அறியப்படுதலினானும், என்னை யுணர்த்தற்குத் தக்க துணைக்கருவி யாயினும் எனக்கு முன் பின் இல்லாமையானும் யானே யுண்மைப்பொருளாயிற்று. அருத்தாபத்தி: நித்திய உபவாசி யென்பான் உடலின் பூரிப்பு இரவிற் கரந்துண்ணுதலைக் குறிப்பிக்க நின்றாற் போலச் சமஸ்தமும் என்பால் ஏற்றில னென்பான் உணர்வின் பூரிப்பு இவனறியாமல் இவன் அவித்தையிற் கரந்தேற்பதைக் குறிப்பிக்க நிற்பது. இங்ஙனங் கொள்ளுங் கொள்கை யெனது கற்பிதமாதலினானும், என்னையன்றி யில்லாமையானும் யானே யுண்மைப் பொருளாயிற்று. அபாவம்: முன் பின் இடை யென்று மில்லையெனச் சசவிஷாண வந்தியாபுத்திர ககனாரவிந்தத்தைப் பிரதிவாதிப்பதுபோல அறிவுக்கு வெதிருத்தமாகக்காணப்படுஞ் சகசீவபரமனைத்தும் இந்நான்கு காலத்திலும் இல்லையெனப் பிரதிவாதிப்பது. இந்நெறித்தாய அபாவம் அறிவே வடிவாயுள்ள எனக்கு முன்பின் னில்லாமையானும், என்னையன்றி வேறல்லாமையானும்; யானே யுண்மைப் பொருளாயிற்று. ஐதிகம், இம்மரத்தின்கண் பேயுளது என்றாற்போல இவ்வசத்தின்கண் சத்துளதெனச் சாதிப்பது. இத்தன்மைத்தாய ஐதிகம் சத்துவடிவாயுள்ள என்னையன்றி வேறில்லாமையானும் எனக்கு முன்பின் இல்லாமையானும் யானே உண்மைப் பொருளாயிற்று. சம்பவம்: ஆயிரத்தில் நூறுண்டு என்றாற்போலப் பிரமத்தில் கூடஸ்தனுண்டென்றும், நூறுமயத்தையன்றி யாயிரத்திற்குப் பொருள் வேறின்றாய வாறுபோலக் கூடஸ்த மயத்தையன்றிப் பிரமத்திற்குப் பொருள் வேறின்றென்றும் வாதித்தல். இவ்வழித்தாய சம்பவம் என்றால் கணிக்கப் படுவதினானும், என்னையன்றி வேறல்லாமையானும், எனக்கு முன்பின் இல்லாமையானும் யானே யுண்மைப்பொருளாயிற்று. இதனால் யாவராயினுங் குருவருளால் தன்னைத் தானறியவேண்டு மென்பதாயிற்று. (உகஙக)

அ-கை.

இந்நூலைக் கேட்குமாறு கேட்கில் உண்டாம் பயன் இனைய தெனல்.

கற்பவற்றைக் கற்றுக் கடிநின்றூன் மூன்றுதரம்
கற்பனையில் லாக்குருமுன் கற்பானேல்—அற்பமும்வே
றின்றிச் சுகித்திருப்ப னேகமிரண் டென்றுமல்
அன்றென்று மாமென்று மாய்.

(எ-து.) கற்கத்தகும் ஆரியம் திராவடம் முதலிய பாஷைகளையும், கணிதம், ஆயுள், பூகோளம், ககோளம், ஆயுதப்பயிற்சி முதலிய விஷயங்களையும் வழுவறக் கற்றுணர்ந்த பின்னர் ஆத்துமார்த்தத்திற் குரிய நூல் இதுவாகலின் இந்நூலைச் சுருதி யுத்தி யனுபவத்துக்கேற்க முறையே தனித்தனி மூன்றுதரம் கற்பித ரகிதமான ஞானாசிரியர் முன்னிலையில் ஒருவன் கற்றுணர்ந்து தெளிய வல்லனாயின் அவன் சிறிதும் தனக்கன்னியமென்ப தின்றி நிரதிசயானந்த வாழ்வில் சுகித்திருப்பன். ஏகம் துவிதமெனத் தன்பால் கற்பிக்காமல் சமஸ்தமுந் தானன்றெனவும், தானே சமஸ்தமு மாமெனவும் விளங்குபவனாய்— எ-று.

சுருதி பூர்வகமாகவும், யுத்தி பூர்வகமாகவும், அனுபவ பூர்வகமாகவு மிங்ஙன மூன்றுதரம் விசாரித்துத் தெளியவேண்டு மாதலின் மூன்றுதரங் கற்றுணரி லெனவும், இவ்வாறு தானேதெளியக் கூடாததுபற்றிக் கற்பனையில் லாக்குருமுன் எனவுங் கூறினர். இதனால் இந்நூலை விசாரித்துத் தெளிதலா லாம்பய னிதுவெனபதாயிற்று.

அ-கை.

இந்நூற் புதுமை யினைய தெனல்.

தானல் லவற்றைத் தனதுருவென் றெண்ணுமுயிர்
தானின்ன தென்றுணர்ந்து தானாதற்—கானவகை

செப்புவதா லின்னூற் றிறந்தெரிந்தார் துக்கமுறார்
இப்புதுமை போலெங் கிலை.

(எ-து.) தானல்லாத வடிவ மனைத்தையும் தனது யதார்த்த வடிவமெனக் கருதி யுழலுஞ் சீவர்களில் சிறந்த மக்களுயிர் தானென்பது இனையதென உள்ளவாறு கண்டுணர்ந்து கற்பனாவடிவங்கள் கழன்று தானேதானாதற் கேற்றவகை யனைத்தையும் இந்நூல் பிரதிவாதிப்பதால் இதில் கூறப்படும் ஞானதிறத்தையெல்லாம் சந்தேக விபரீத மற வாசித்துத் தெளிந்த உத்தமர்கள் சனன மரண துக்கமடையார். ஆதலின் இப் புதுமையைப்போல் புதுமை யெங்குளது? எங்கணும் இல்லை—எ-று.

உயிரெனப் பொதுப்படக் கூறினாரேனும் தானென்பதைச் சிந்தித்துத் தெளியற்பாலது மக்களுயிராதலால் உயிரை மக்களுயிரென்றாம். இந்நூல் திறமாவது: யாதினால் துக்கம் விளைதற்பாலதோ அதனை விளக்குவித்தல். அதாவது எவ்வுயிர்களும் பிரக்ஞா சொரூபம் ஆதலால் அதனுக்கு வெதிருத்தமாகக் காணப்படுவன அனைத்தையும் பிரக்ஞாசொரூபமாக ஞாயத்தால் விளக்கல். இதனால் இந்நூல் துக்கமறுக்கத்தக்க மகிமையுடைய தென்பதாயிற்று. (உகஅ)

அ-கை.

இங்ஙன மையந் திரிபறுத் தாண்ட குருநாதனை வியந்து வாழ்த்தல்.

அறிவே திருக்கின் கறிபொருளே மாயை
அறிவுக் கயலன் றறிவன்—றறிபொருடான்
என்றுணர்த்தி யாண்ட விறைவன் கழல்வாழ்க!
என்றனைப்போல் வார்க்கருள விங்கு.

(எ-து.) முன்னர் எம்மதச் சம்மதங்களும் தலைசாயச் சைதன்னியமே திருக்கெனவும், அச் சைதன்னியத்தால் அறியப்படுவனவா

ஐய சகல கற்பிதங்களுமே திரிசிய மெனவுங் கூறிப் பின்னர் அத்திருக்கு திரிசியம் இரண்டன்று ஒன்றேயெனச் சுருதியாதிகட்கு ஒக்கக் காட்டுவான் வேண்டித் திரிசியம் திருக்குவுக்கு மட்கடம் போன்று அபேதமா யிருத்தலின் அன்னியமு மன்று. கடபேதங்கள் மண்ணுலாயினும் அவை மண்வடிவ மாகாவாறுபோன்று அத்திரிசிய பேதங்கள் திருக்கினுலாயினும் அவை திருக்குவடிவ மாகா ஆகலின் உன்னியமு மன்றெனத் தெளிவுபெற எனக்குத் தெரிவித்து ஆட்கொண்ட குருநாதனது திருவடிகள் பல்லாண்டு பல்லாண்டு வாழக்கடவது! இவ்வுலகின்கண் என்போன்று வரும் அடியார்களுக் கனுக்கிரகிப்பான் வேண்டி—எ-று.

அன்னியமெனில் துவிதமும், உன்னியமெனில் விசிட்டாத்துவிதமும் ஆதலின் அறிவுக் கயலன் றறிவன் றறிபொருடா னென்றார்.()

அ-கை.

இந்தக் கிரந்தகர்த்தா தனக்கு நாமமிட்டாரையும், அதனை விளக்கினவரையும் வியந்து புகழ்தல்.

சச்சிதா னந்தமெனத் தாய்தந் தையரிட்டார்
அச்சிதனை யேற்குமெனு மாரணங்கள்—மெச்சுகுரு
காட்டினு னென்னிடத்திற் கண்டே னதுவாக
நாட்டுமிதி லார்பெரியர் நாடு.

(எ-து.) சச்சிதானந்தமென்று தாய் தந்தையர் எனக்குப் பெயரிட்டார்கள். இத்தன்மையானபெயரை ஆன்மா வர்க்குமென்று வேதாகமங்கள் முறையிடும். இக் நாமத்திற்குரிய இலக்கணங்களை மகான்களால் மெச்சத்தக்க னதுஞானசிரியன் என்னிடத்திலிருக்கக் காட்டினன். அங்ஙனங் காட்டியதை உள்ளவாறு யான் அதுவாகும்படி கண்டனன். ஆதலின் இங்ஙனம் காட்டிய இதில் யார்சிறந்தவராவார் [redacted]ன நாடுதி—எ-று. (உசo)

திருச்சிற்றம்பலம்.

திருக்குதிரிசியவிவேகம் மூலமும் உரையும்
முற்றிற்று.